[13th December 1961]

SRI S. M. ANNAMALAI : இந்தப் பணம் சர்க்காரால் எப்பொழுது சாங்ஷன் செய்யப்பட்டது? பஸ் ஸ்டாண்டு கட்டுவதற்காக ஒதுக்கப்பட்ட பணத்தை வேறு வழியில் செலவழித்ததற்காக பஞ்சாயத்துத் தலைவர் மீது ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது?

THE HON. SRI C. SUBRAMANIAM : நடவடிக்கை எடுப்பதற்காகத்தான் நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. அந்தப் பணத்தை இப்பொழுது பஸ் ஸ்டாண்டு கட்டுவதற்காக உபயோகப்படுத்தி விட்ட காரணத்தினால், இனிமேல் ஏதாவது தவறு ஏற்பட்டால் அப்பொழுது நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, பஞ்சாயத்துத் தலைவர் 1955-56-ல் ஆடிட் ரிப்போர்ட்படி ரூ. 3,500 அளவு முறை தவறி உபயோகப்படுத்தியதுபற்றி எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தத் தகவல் என்னிடம் இல்லை.

* 2281 *Q.*—SRI K. ANBAZHAGAN : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether any complaint has been made to the Collector of Chingleput against the President of Sriperumbudur Panchayat that a cheque for Rs. 3,000 received by him for a public cause has not been utilised for the purpose; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes. Sir, the Collector of Chingleput has reported that the cheque was for Rs. 3,500.

(*b*) The president has received the sum not in his capacity as the president of the panchayat but only in his capacity as the president of the Local School Building Committee. He has been advised by the Collector to deposit the amount in a savings bank and the Revenue Divisional Officer has also advised him to take up the construction of the school building and complete the work as early as possible.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, 1957-ம் வருஷம் ஜூன் மாதம் 20-ம் தேதியில் பஞ்சாயத்து தலைவர் ரூ. 3,500-க்கு செக்கை பெற்றிருந்தும், கடந்த மூன்று, நான்கு ஆண்டுகளாக அதிகாரிகளுக்குத் தெரிவிக்காமல் அண்மையில் இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்ற குற்றத்திற்காக தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சர்க்கார் கருதவில்லையா?

THE HON. SRI C. SUBRAMANIAM : கலெக்டரோ, சர்க்காரோ நடவடிக்கை எடுப்பதற்கு ஒன்றும் இல்லை. இருந்தாலும் கலெக்டர்

தலையிட்டு நடவடிக்கை எடுத்துக்கொண்டதின் காரணமாக பணத்தை திருப்பி கொடுத்திருக்கிறார். இதுமாதிரி ஏற்பட்டால் சர்க்கார்தான் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்பதில்லை. இதைக் கொடுத்தவர்கள் யாராவது தங்களிடம் தகவல் வைத்திருந்தால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம்.

SRI K. ANBAZHAGAN: பஞ்சாயத்து சட்டப்படி நடவடிக்கை எடுக்க இடம் இல்லையென்றால், போலீஸ் இலாக்கா நடவடிக்கை எடுப்பதற்கு வழியில்லையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: போலீஸ் நடவடிக்கை எடுப்பதற்கு முன்னால் இதில் கிரிமினல் குற்றம் இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். அப்படி இருந்தால் நடவடிக்கை எடுக்கவேண்டும். அல்லது யாராவது பணம் கொடுத்தவர்கள் அக்கரையுள்ளவர்கள் ரிபோர்ட் கொடுப்பார்களேயானால் இதைப் போலீஸ் இலாக்கா பரிசிலனை செய்யும்.

SRI T. SAMPATH: Sir, may I know whether receipt of deposits will be considered as an offence?

THE HON. SRI C. SUBRAMANIAM: Receipt of deposit and not utilising it for the purpose for which it is received will be an offence.

SRI S. M. ANNAMALAI: ஸார், இப்படி பஞ்சாயத்து போர்டு தலைவரே பணத்தை துர்விநியோகம் செய்தவர்மீது, பில்டிங்குக்காகக் கொடுத்த பொதுப்பணத்தை இம்மாதிரி செய்பவர்மீது நடவடிக்கை எடுத்து, அவரை நீக்க ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதுதான் ஜனநாயகத்தில் உள்ள சில குறைகள்; இப்படிப்பட்டவர்கள் சில சமயங்களில் பொதுமக்களால் தேர்தெடுக்கப்பட்டு வந்து விடுகிறார்கள். ஆகையினால், பொது மக்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும்போது கவனிக்க வேண்டிய விஷயம் இதுவும். இதிலிருந்து வரக்கூடிய பொதுத் தேர்தலில் மக்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

SRI K. ANBAZHAGAN: தலைவர் அவர்களே, 1957-ம் ஆண்டில் அளிக்கப்பட்ட செக்கை இவர் யாருக்கும் சொல்லாமல், அவரே அந்தச் செக்கை மாற்றி, பணத்தையும் கையாண்டிருக்கிறார், எந்த அதிகாரிகளுக்கும் தெரிவிக்காமல். இந்த விதமாகச் செய்தது மோசடி என்றாவது கனம் அமைச்சரவர்கள் ஒப்புக்கொள்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதைப்பற்றி அபிப்பிராயம் கொடுக்கக்கூடிய நிலையில் நான் இங்கே வக்கீலாக இல்லை; இதில் சர்க்கார்தான் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதில்லை. யாராவது குற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று ரிபோர்ட் கொடுத்தாலும், தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

13th December 1961]

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இதே பஞ்சாயத்துத் தலைவரே பஞ்சாயத்துக்கு தண்ணீர் குழாய்கள் வைக்கும் திட்டத்தில் அவரே காண்ட்ராக்ட் எடுத்து, ரூ. 87,000 பஞ்சாயத்திலே பெற்று இருக்கிறார் என்பதும். . . . . .

DEPUTY SPEAKER : This question does not arise out of the main question.

SRI K. ANBAZHAGAN : I do not want to put any more questions on this subject now but I would request the Chair to allow a half-hour debate on the irregularities in the panchayat . . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, it would be most inadvisable to discuss the panchayat however important it might be. There is the panchayat organization and the law relating to panchayats. I would request the hon. Member, Sri Anbazhagan, not to press for half-hour debate here. He could initiate action in the panchayat and he is quite capable of doing it. As far as the Government are concerned, I can assure him that all steps would be taken to see that these irregularities are not committed and we should also warn the public that whenever men of integrity are not available, any person who offers himself as a candidate should not be elected.

DEPUTY SPEAKER : The hon. Member has got an opportunity to discuss this matter during the Budget discussion. So I do not think that there is any necessity to allow a half-hour debate.

*Madhar Sangams*

* 2283. *Q.*—SRI G. ANNAMALAI MUTHURAJA : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் எத்தனை மாதர் சங்கங்கள் உள்ளன ?

(இ) 1961-ல் அவைகளுக்காக எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டுள்ளது ? எவ்வாறு செலவிடப்படுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) 110 Madhar Sangams are functioning under the Women's Welfare Department.

(ஆ) Rs. 2,500 per annum to be utilised for purchase of centre materials and games materials.

SRI G. ANNAMALAI MUTHURAJA : ஸார், சாதாரணமாக பஞ்சாயத்து போர்டில் மாதர் சங்கங்கள் இருக்கின்றன. அதே மாதிரி யூனியன்களிலும் மாதர் சங்கங்கள் வைக்க உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது விமென்ஸ் வெல்பேர் டிபார்ட்மெண்டால் செய்யப்படுகிறது. இப்பொழுது 110 மாதர் சங்கங்கள் நடைபெறுகின்றன. எங்கெங்கே புதிதாக ஆரம்பிக்க முடியுமோ, அங்கெல்லாம் ஆரம்பிக்கப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.